[5th May 1962

SRI A. P. DHARMALINGAM : இப்படி தீ விபத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு எவ்வளவு நஷ்ட ஈடு கொடுப்பதாக சர்க்காருக்கு உத்தேசம் ?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : அது பரிசீலனையில் இருந்து வருகிறது.

*Housing Scheme (Low-Income Group)*

*34 Q.—SRI M. S. MANI : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

குறைந்த வருவாய் உள்ளவருக்கு வீடுகட்டித் தரும் திட்டத்தின்கீழ், குறைந்த வருவாய் உள்ளோர் எனச் சேர்த்துக்கொள்ளப்பட்டவர்களின் பட்டியல் சபையின்முன் வைக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : The Government are not maintaining any list showing the persons who come under the Low Income Group Housing Scheme. Hence it is not possible to place such a list on the Table of the House.

However, for the information of the hon. Member, I may say, that lower middle class people, whose annual income does not exceed Rs. 6,000, are eligible for assistance under the Low Income Group Housing Scheme of the Government of India.

SRI M. S. MANI : எவ்வளவு ரூபாய்க்கு வருமானம் வருகிறவர்களை குறைந்த வருமானமுள்ளவர்கள் என்றும் எவ்வளவு ரூபாய்க்கு அதிகமாக வருமானம் வருகிறவர்களை அதிக வருமானம் உள்ளவர்கள் என்றும் கருதப்படுகிறார்கள். அதில் பீடி சுருட்டு போன்ற சில்லரைத் தொழில்களிலிருந்து கூலி பெறுகிற தொழிலாளர்களையும் சேர்த்துக்கொள்ளுகிறார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : வருஷம் ஒன்றுக்கு 6,000 ரூபாய்க்குக் குறைவாக வருமானம் வரக்கூடியவர்களை எல்லாம் குறைவான வருமானம் வரக்கூடியவர்கள் என்று அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது.

SRI V. KRISHNAMOORTHY : வருமானத்தின் அடிப்படையில் இந்த திட்டத்தை பயன்படுத்தப்படும் என்று கனம் அமைச்சர் சொன்னார். ஏற்கெனவே வீடு கட்டிக்கொண்டிருக்கிறவர்கள் இந்த திட்டத்தினால் பயன் அடையாமல் இருந்தால் அவர்களுக்கு இந்தத் திட்டம் நீடிக்கப்படுமா ? அவர்கள் பயன் அடையாமல் இருப்பதற்கு அரசாங்கம் வழிவகை செய்யுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அதற்கு வேண்டிய விதிகள் ஏற்கெனவே இருக்கின்றன. இந்தத் திட்டத்தின் கீழ் யாராவது வீடுகள் வேண்டுமென்று மனுச் செய்துகொண்டால் அந்த மனுவில் அவருக்கு வேறு வீடு இருக்கிறது என்று கண்டிருந்தால் அவருக்கு இது அனுமதிக்கப்பட மாட்டாது.

5th May 1962]

SRI SAW. GANESAN : இந்தத் திட்டத்தின் கீழ் இது வரைக்கும் பயன்பட்டிருக்கும் மக்களின் தொகை எவ்வளவு என்பதை கனம் அமைச்சர் அவர்கள் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது வருகிற பட்ஜெட்டின் போது எவ்வளவு வீடுகள் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கின்றன என்ற கணக்கெல்லாம் வைக்கப்படும். அதனுல் இப்பொழுது அதைப்பற்றிய கணக்கு கொடுப்பதற்கு இல்லை.

SRI T. L. SASIVARNA THEVAR : இந்தத் திட்டத்தின் கீழ் எவ்வளவு வீடுகள் கட்டிக்கொடுக்க இருக்கிறுர்கள் ?

[பதில் இல்லை]

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : தலைவர் அவர்களே, 6,000 ரூபாய்க்குக் குறைவாக வருமானம் வரக்கூடியவர்களுக்கு இந்தத் திட்டம் பயனடையச் செய்வார்கள் என்று கனம் அமைச்சர் சொன்னுர். இந்த வருமானம் என்பது மாதச் சம்பளம் உள்ளவர்களா, தினத்தொழில் செய்து கூலி பெறுகிறவர்களா, அல்லது வியாபாரம் செய்கிறவர்கள் முதலியவர்கள் இதில் வருகிறுர்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது இருக்கிறபடி வருமானம் என்ருல் வருஷம் 6,000 ரூபாய்க்குக் குறைவாக வருமானம் வரக்கூடியவர்களாக இருந்தால் அவர்களுக்கு இந்தத் திட்டம் பயன் அளிக்கும்.

SRI K. S. MANI : விவசாயத் தினக் கூலி பெறுகிறவர்களுக்கும் இதன் மூலம் பயன் அடைய இடம் இருக்கிறதா என்பதை அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவர்களுக்கும் வருஷ வருமானம் 6,000 ரூபாய்க்குக் குறைவாக வரும் என்றே நினைக்கிறேன். அவர்களுக்கும் வீடுகள் கட்டிக்கொடுக்கும் நிலைமை இருக்கும். அதனுல் அவர்களுக்கும் இந்த உதவி கொடுக்கப்படும்.

SRI C. CHIRANJEEVULU NAIDU : As the present Co-operative Housing Scheme is not beneficial to the village people, and it is not properly utilized and so will the Government be pleased to extend this Low Income Group Housing Scheme to villagers also?

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, there are two or three types of housing schemes which are available. We have got the Low Income Group Housing Scheme which I have just explained. We have the Industrial Housing Scheme subsidised by the Government of India for people working in factories governed by the Factories Act. We have also the Rural Housing Scheme for which we are giving loans up to two-third of the cost of the house on long term basis, i.e., 25 to 30 years. People with low income can take advantage of any of these schemes. In addition we have got the State Government Scheme of Co-operative Housing and it will be available to anybody without any ceiling on income.

[5th May 1962

**Sri S. RAMASAMY NAIDU :** கனம் அமைச்சர் அவர்கள் வீடு இல்லாதவர்களுக்கு இந்தத் திட்டம் உதவி அளிக்கும் என்று சொன்னார். வருஷம் 6,000 ரூபாய் வருமானம் உள்ளவர்கள் வீடு இல்லாமல் இருப்பார்களா என்ற சந்தேகம் இருக்கிறது. ஆகவே நல்ல கட்டிடம் இல்லாமல் கூரை வீடாக இருந்தால் அவர்களுக்குக் கொடுக்கலாமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN :** வருஷ வருமானம் 6,000 ரூபாய்க்குக் குறைவாக இருக்கிறவர்களிலும் ரொம்பப் பேர்கள் வீடுகள் இல்லாமல் இருக்கிறார்கள் என்பதையும் தெரிவிக்க விரும்புகிறேன்.

*Government Arts College, Octacamund (Hostel)*

*35 Q.—**Sri J. MATHA GOWDER :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உதகை சர்க்கார் கலைக் கல்லூரிக்கு சொந்தமாக மாணவர் தங்கும் விடுதி இல்லையென்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

(இ) அப்படியானால், இதுவரையிலும் சொந்தக் கட்டிடம் கட்டாத காரணம் என்ன ?

(உ) எப்போது கட்டி முடிக்கப்படும் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** (அ) Yes, Sir.

(இ) & (உ) The construction of a permanent building for the College is under consideration. It is proposed to utilise the existing college building for the hostel after the permanent building for the College is constructed.

**Sri J. MATHA GOWDER :** ஸார், உதகை கல்லூரி மாணவர்களுக்கு விடுதி கட்டுவதற்கு என்று எவ்வளவு எஸ்டிமேட் போடப்பட்டிருக்கிறது என்பதைச் சொல்ல முடியுமா ? ஏற்கெனவே எஸ்டிமேட் போடப்பட்டிருக்கிறது என்று சொல்லப்பட்டது. அப்படி எஸ்டிமேட் தயாராக இருந்தால் அது எவ்வளவு ? அந்த எஸ்டிமேட் தயாராக இருந்தால் எப்பொழுது அந்தக் கட்டிடத்தைக் கட்ட ஆரம்பிக்க உத்தேசம் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் சொல்ல முடியுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** டிசம்பர் 1961-ம் ஆண்டிலேயே எஸ்டிமேட் தயாரிக்கப்பட்டு ஆறு லட்சம் ரூபாய் செலவில் 100 மாணவர்களுக்கு ஹாஸ்டல் வசதி செய்து கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டது. அதற்குப் பிறகு மீண்டும் அதைப் பற்றி யோசனை செய்து அதற்கு என்று தனியாக கட்டிடம் கட்ட வேண்டாம் என்றும், கல்லூரிக்கு என்று தனியாக ஒரு கட்டிடம் கட்டி விட்டு இப்பொழுதுள்ள கல்லூரி கட்டிடத்திற்கே சில சீர் திருத்தம் செய்து அதில் ஹாஸ்டலை வைக்கலாம் என்று முடிவு